# சீர்மிகு சிறுவை முருகன் தல வரலாறு





## சிறுவாபுரி ஸ்ரீபாலசுப்ரமணிய ஸ்வாமி

ரூ. 5/-

7994 31-2
Q1:38

# சீர்மிகு சிறுவை முருகன் தல வரலாறு

## கலியுகத்தில் பேசும் முருகன்
## வரம் மிகுந்த பெருமாள்

'தொண்டை நாடு சான்றோர் உடைத்து' என்ற சொல்லுக்கு'ச் சான்றாக, சேக்கிழார் பெருமான் பேயாழ்வார். திருமழிசை ஆழ்வார், திருவள்ளுவர் போன்றோர் தோன்றிய தொண்டை வள நாட்டில் தருமமிகு சென்னைக்கு வடமேற்கே சென்னை - கல்கத்தா நெடுஞ்சாலையில் (NH5ல்)சென்னையில் இருந்து 33வது கிலோ மீட்டரில் இடது பக்கம் (மேற்கே) பிரியும் சாலையில் சிறுவாபுரி பாலசுப்ரமணிய சுவாமியின் தோரண வாயில் (நுழைவாயில்) நம்மை வரவேற்கிறது. இந்தத் தோரண வாயிலில் இருந்து மேற்கே 3 கிலோ மீட்டர் தொலைவில் 'சின்னம்பேடு' எனத் தற்போது அழைக்கப்படும் சிறுவாபுரி பால சுப்ரமணியப் பெருமான் ஆலயம் அமைந்துள்ளது.

நுழைவாயிலைக் கடந்து ஆலயம் நோக்கிச் செல்கையில், சாலையின் இரு பக்கமும் பசுமையான நிலங்கள், வீசியாடும் நெற்கதிர்கள், குலுங்கிக் குலை தள்ளி ஆடும் வாழைத் தோப்புகள், கிராமத்தின் நுழைவாயிலில் சப்தமாதர் கோவில் நடுநாயகமாக அகத்தீஸ்வரர் கோவில், மேற்கே பெருமாள் கோவில், பெருமாள் கோவிலுக்குப் பின்னால் விஷ்ணு, துர்க்கை கோவில்கள், வடக்கே வாயு மூலையில் சிறுவாபுரி பாலசுப்ரமணிய சுவாமி ஆலயம் கம்பீரமாக நம் கண்ணுக்குக் காட்சி தருகிறது. இவ்வூரில் ராமர் கோவில், விநாயகர் கோவில், ஜைனர் 22வது தீர்த்தங்கரர் பள்ளி என கோவில் பல இருப்பதை, அருணகிரிநாதர், "**ஆடகம்பயில் கோபுரம் மாமதில் ஆலயம் பலவீதியுமே நிறைவான தென்சிறுவாபுரி**" எனத் திருப்புகழில் பாடியுள்ளார்.

சிறுவாபுரி அருள்மிகு பாலசுப்ரமணிய சுவாமி கோவில் ராஜகோபுரம் 5 நிலைகளுடன் கம்பீரமாக 'வருக வருக!' எனக் கட்டியம் கூறி நம்மை வரவேற்கிறது. 'ஐம்பொறிகளையும், ஐம்பூதங்களையும் அடக்கு, அடக்கு!' என ராஜகோபுரம் நம்மிடம் கூறுவது போல் உள்ளது. உயர்மான கொடிமரம், கொடிமரத்துக்கு முன்னால் அழகே திருஉருவம் கொண்டது போல் மரகதப் பச்சை

மயில் கொலுவாக வீற்று இருக்கிறது. இது போல் சிறந்து வடிவமைப்புள்ள மரகத மயில் அகில உலகிலும் வேறு எங்கும் இல்லை என உறுதியாகக் கூறலாம்.

கோவிலின் தென்மேற்கு மூலையில் மரகதக் கல்லில் சூரியனார் ஒளி வீசிக்கொண்டு இருக்க, நேர் எதிரில் கிழக்கே திரு முகம் கொண்ட கம்பீரமான ராஜகணபதி மரகதக் கல்லில் பச்சைப் பசேல் என் மின்னிட 'மரகத விநாயகர்' என்ற நாம கரணத்துடன் வேண்டுவதை அளிக்க, அழகுக் கோலத்துடன் வீற்று இருக்கிறார். பின் பிராகாரத்தில் சண்டிகேஸ்வரர், ஆதிமூலவர் (முன் இருந்த பாலசுப்ரமணிய சுவாமியின் விக்கிரகம்), நாகர், பைரவர், நவக்கிரகம் என பரிவார தேவதைகள் புடைசூழ சிறுவாபுரி பாலசுப்ரமணியர் காட்சி தருகிறார். இங்கு நவக்கிரகம் ஒன்பதும் வாகனத்துடன் இருப்பது சிறப்பாகும். சந்ததமும், அடியார் சிந்தையில் குடியிருக்கும் முருகப்பெருமான், நம் சிந்தையைக் கவர்கிறார். கலியுகத்தின் பேசும் கடவுளான பாலசுப்ரமணியப் பெருமானின் அருட்பார்வை நம்மை நோக்கிப் பாய்ந்து வர, சிறுவை மேவி வரம் மிகுந்த பெருமான் நாம் வேண்டும் வரங் களை அள்ளி அள்ளித் தர, உடலும் உள்ளமும் லேசாகி மிதந்து வர, நம்மை நாம் இழந்து அவன் திருவடிகளில் சரணாகிறோம். ஆகம சார சொரூபன், சேவல மாமயில் ப்ரீதன், தேவ சேனாதிபதி, தன்தரள மணிமார்பன், தண்தமிழ்மிகு நேயன், சந்தமும் அடியார் சிந்தையில் குடிகொண்டவன், செம்பொன் எழில் சொரூபன், புண்டரிக விழியாளன், தேவேந்திரன் மகள் மணவாளனின் முன் வலது கரம் அடியவருக்கு அபயம் அளிக்க, பின் வலக்கரம் ஜப மாலை ஏந்தி இருக்க, முன் இடக்கரம் இடுப்பிலும், பின் இடக்கரம் கமண்டலமும் தாங்கி, பிரம்மசாஸ்தா கோலத்தில் காட்சி அளிக்கிறார். பிரம்மனைத் தண்டித்து பிரம்மனின் படைத்தல் தொழிலை ஏற்றுக் கொண்ட கோலம் கொண்ட முருகப் பெருமானை வணங்கினால் வித்தைகள் பல கற்ற பேரறிஞர் ஆகலாம் என "**பந்திநிறை அறிவாள**" எனும் திருப்புகழில் அருணகிரிநாதர் பாடியுள்ளார்.

முக மண்டபத்தில் அருணகிரிநாதர் சிறுவை பாலசுப்ர மணியப் பெருமானை கண்ட பெருமிதத்துடன் திருப்புகழ் பாடி நிற்கும் கோல வடிவைக் காணலாம்.

முருகப் பெருமானுக்குத் தெற்கே அண்ணாமலையார் மரகதப் பச்சையில் கரும்பச்சை வைரம் போல் பிரகாச ஜோதி யாகக் காட்சி அளிக்கிறார். இத்துணை பெரிய மரகதலிங்கம் வேறு எங்கும் இல்லை.

அருணகிரிநாதர் திருவண்ணாமலைக்கு **'மயிலுமாடி நீயுமாடி வரவேணும்'** என்று பாடியதற்கு இணையாக, இங்கு **'மைந்துமயில் உடன் ஆடிவர வேணும்'** எனப் பாடி உள்ளதால் அண்ணா மலையாரும் உண்ணாமுலை அம்மையும் இங்கு எழுந்தருளி இருக்கிறார்கள். அருணாசலேசுவரர், அபீதகுஜாம்பிகை (உண்ணா முலை) இருவருக்கும் நடுவே அற்புதத் தோற்றமாய், அச்சம், மடம், நாணம், பயிர்ப்புடன் கூடிய வள்ளிநங்கை தம் மணவாளப் பெருமான் முருகனைக் கைத்தலம் பற்றும் திருமணக் காட்சியாய் எழுந்தருளி யிருக்கிறார். கைத்தலம் பற்றுகின்ற பொழுது இயற்கையாய்ப் பெண்ணுக்கு ஏற்படும் கூச்சம், நாணம், பயிர்ப்பு காரணமாக வள்ளி ஒய்யாரமாக லேசாக முன் சாய்ந்து, ஒரு கண் மூடிய நிலையில் நிற்கின்ற கோலத்தைக் காணக் கண் கோடி வேண்டும். பின் புறத்திலிருந்து நோக்கும்பொழுது வள்ளி கள்ளத் தனமாக அரைக்கண் பார்வையாக முருகனை நோக்குவது போல் சிற்பி சிலையை வடித்திருக்கிறார். மிக நேர்த்தியான வேலைப் பாடு. இது போன்ற சிலை வடிவம் வேறு எங்கும் இல்லை. ஓவியமாக வள்ளி மலையில் இருக்கும் கோலத்தை, சிலை வடிவமாக இங்கு அமைத்து இருப்பது மிகச் சிறப்பாக வள்ளி மணவாளப் பெருமானின் அழகைக்காணக் கண் கோடி வேண்டும்.

இங்குள்ள விக்கிரகங்களில் பாலசுப்ரமணியசுவாமி, ஆதிமூலர், நவக்கிரகம் தவிர மற்ற விக்கிரகங்கள் பச்சைக்கல்லில் செய்யப்பட்டவை. முருகன் சிலை கூட முன்பு மரகதப் பச்சைக் கல்லில் இருந்து காலப்போக்கில் பின் நிறுவப்பட்டபோது கருங் கல்லில் செய்யப்பட்டிருக்கலாம். இதுபோல் எல்லா விக்கிரகங் களும் மரகதப் பச்சைக் கல்லில் உள்ளதுபோல் வேறு எந்தக் கோவிலிலும் இல்லை.

அருணகிரிநாதர் நான்கு திருப்புகழ்களினால் இந்த ஸ்தலத்தைப் பாடியுள்ளார். அருணகிரிநாதர் பாடிய 10000 திருப் புகழ்களில் நம் கைக்குக் கிடைத்து இருப்பவை 1330 திருப் புகழ்தாம். அவற்றுள் 224 ஸ்தலங்களைப் பாடியுள்ளார். திருப்புகழ்

பாடல் பெற்ற ஸ்தலங்களில் 9 இடங்கள் இதுவரை கண்டறியப் படாமல் இருக்கின்றன. கண்டறியப்பட்ட 215 ஸ்தலங்களில் 35 ஸ்தலங்களைச் சிறப்பாகப் பாடியுள்ளார். 8 ஸ்தலங்களில் 4 திருப் புகழ் பாடி இருக்கிறார். 6 ஸ்தலங்களுக்கு அர்ச்சனைத் திருப்புகழ் பாடியுள்ளார். திருப்புகழில் பாடப்படும் நாயகனாக முருகன் இல்லாமல் 6 பாடல்களில் பாடும் நாயகனாக விநாயகப் பெரு மானைப் பாடியுள்ளார். மேற்கண்ட திருப்புகழ் ஆய்வின்படி 6 அர்ச்சனைத் திருப்புகழில் ஒன்றாக சிறுவைக்கு **"சீதளவாரிஜ பாதா நமோ நம:"** என ஒரு பாடலுடன் நான்கு திருப்புகழ் பாடிய 8 ஸ்தலங்களில் ஒன்றாக சிறுவாபுரியும், அமைந்து இருப்பது சிறப்பு. **'அண்டர்பதி குடியேற'** என்ற முதல் திருப்புகழில் **"மகிமீற, மகிழ்கூர, மகிழ்வாக, மகிழ்கூற, இன்பமுற"** என ஐந்து இடங்களில் மகிழ்ச்சிப் பெருக்குக் கூறப்பட்டது போல் வேறு எந்தத் திருப்புகழிலும் சிறப்பாக, ஐந்து முறை சொல்லப்படவில்லை என்பது இன்னும் ஒரு சிறப்பு. இந்தத் திருப்புகழின் ஈற்றடியில் கடைசியில் சொற்கள் ஒரு வாக்கியமாகப் பொருள்பட அமைந்து இருப்பதும் ஓர் அரிய சிறப்பாகும். **'அருளாலே', 'மகிழ்வாக', 'எதிர்காண', 'வரவேணும்', 'உயர்தோளா', 'வடிவேலா', 'முருகேசா', 'பெருமாளே!'** என ஒரு வாக்கியமாக அமைவதுபோல், வேறு எந்த ஒரு திருப்புகழிலும் அமையவில்லை.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக இந்த ஸ்தலத்துக்கு வருபவர் கடுமையான விரதமாகப் பசி பட்டினி இருந்து நோன்பு நோற்று இறைவனை அடைய வேண்டியதில்லை. **"சந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான தண் சிறுவைதனில் மேவு பெருமாளே!"** என்று இவரை "எப்போதும் நினைத்தாலே போதும் அடியவர்க்கு எளிமையாக முருகன் எழுந்தருளி வருவார்" எனக் கூறுகிறார் அருணகிரிநாதர்.

இரண்டாவது திருப்புகழ் அர்ச்சனைத் திருப்புகழாக இருப்பது சிறப்பு. பழநிக்கு "நாதவிந்து கலாதி நமோ நம", என்னும் திருப்புகழைப்போல சிறுவைக்கு **"சீதள வாரிஜ பாதா! நமோ நம"** எனும் திருப்புகழை அருணகிரிநாதர் பாடியுள்ளார்.

அர்ச்சனைத் திருப்புகழ் 6ல் சரணாகதியின் மேன்மையான முருகனின் பாத சரணத்தைக் குறித்து சிறுவைக்கு எழுதி இருப்பது சிறப்பு. **"வானவர் ஊரினும் வீறாகிலீறளகாபுரி வாழ்வினும் மேலாக திருவாழ் சிறுவாபுரி வாழ்வே சுராதிபர் பெருமாளே"** எனப் பாடி,

"இங்கு வருபவர்கள் தேவேந்திரப் பட்டணத்தைக் காட்டிலும் வளமாக வாழ்வர்'' என அழுத்தம் திருத்தமாக எடுத்துச் சொல்கிறார். மூன்றாவது திருப்புகழில் மானிடப் பிறப்பின் துன்பம் எல்லாம் நீங்குவதற்கு வழிகூறுகிறார் அருணகிரிநாதர்.

நான்காவது திருப்புகழில் "**ஜெயமதான நகர்**'' என்று "சிறுவையே வெற்றி கொண்ட நகரம்" என்கிறார். "**ஜெயமதானநகர் அளகை போல வளமிகுந்த சிறுவைமேவி வரமிகுந்த பெருமாளே**" என, "வெற்றியைத் தன்னிடம் அமைத்துக் கொண்ட சிறுவை நகரம், 'குபேரப் பட்டணம்' என அழைக்கப்பட்ட அளகாபுரி போல் எல்லா வளங்களும் அதிகமாகக் குடிகொண்டுள்ள சிறுவா புரியில் குடிகொண்டு உள்ள சிறுவை முருகன் வரம் அதிகம் தன்னிடம் இருப்பு உள்ளவன்" என அருணகிரிநாதர் சொல்வது; "வரமிகுந்தவனை அடிக்கடி நாடி வந்து அவனிடம் இருப்புள்ள வரங்களைப் பெற்றுச் செல்ல வாருங்கள், வாருங்கள்!'' என அழைப்பதுபோல உள்ளது.

## சிறுவைத் திருப்புகழ் நான்கு

அருணகிரிநாதர் சிறுவை முருகனைப் போற்றிப் பாடி இருக்கும் நான்கு திருப்புகழையும், அவற்றின் பொருள் விளக்கத்தையும், மறை பொருளாகச் சொல்லி இருக்கும் பிரார்த்தனைகளையும் நாம் பயன்பெறும் முறைகளையும் கீழே கொடுத்துள்ளோம்.

### வேண்டுவன தரும் திருப்புகழ்

**அண்டர்பதி குடியேற மண்டசுரர் உருமாற**
**அண்டர்மன மகிழ்மீற அருளாலே**

**அந்தரியொ(டு) உடனாடு சங்கரனும் மகிழ்கூர**
**ஐங்கரனும் உமையாளும் மகிழ்வாக**

**மண்டலமும் முனிவோரும் எண்திசையில் உளபேரும்**
**மஞ்சனனும் அயனாரும் எதிர்காண**

**மங்கையுடன் அரிதானும் இன்பமுற மகிழ்கூற**
**மைந்துமயி லுடனாடி வரவேணும்**

புண்டரிக விழியாளர் அண்டர்மகள் மணவாளா!
புந்திநிறை அறிவாளா! உயர்தோளா!

பொங்குகடலுடன் நாகம் விண்டுவரை இகல்சாடு
பொன்பரவு கதிர்வீசு வடிவேலா

தண்தரள மணிமார்ப! செம்பொன்எழில் செறிரூப!
தண்தமிழின் மிகுநேய முருகேசா

சந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான
தண்சிறுவை தனில்மேவு பெருமாளே!

"தேவர்களின் தலைவன் இந்திரன் தேவலோகம், பொன்னுலகம் குடியேறவும், இந்திர பதவி பெறவும், படை வீரர்களான அசுரர்கள் உருமாறி சேவல் கொடியாகவும், மயிலாகவும் வர, தேவர்கள் மகிழ்ச்சிப் பெருவெள்ளத்தில் இருக்க அருளிய சிறுவை முருகனே! எனக்குக் குடி இருக்கச் சிறந்த வீட்டையும் (வேண்டுபவர் பெண்ணாக இருந்தால் சிறந்த மணவாளனைத் தரும்படி வேண்டிக்கொள்ள வேண்டும்) என் எதிரிகளை எனக்கு அடங்கியவராக மாற்றித் தந்து, இந்திர பதவியை இந்திரனுக்கு தந்தது போல் எனக்கு சிறந்த உயர்வான தொழிலைத் தந்து, என் அக வாழ்வை தேவர்களுக்கு அளித்தது போல் பேரின்ப வீடான மோட்சத்தை எனக்கு அருள் முருகா!" என மனத்தில் வேண்டிக்கொண்டு முதல் இரண்டு அடிகளைப் படிக்க வேண்டும்.

"காளியுடன் மிக மகிழ்வான ஆடிய சங்கரனும், மகிழ்ச்சியாக ஐந்துகரத்தான் விநாயகனுடன் பார்வதிப் பிராட்டியும் களிப்பாக இருப்பது போல் என் குடும்பம் ஆமோதம் (மிக மகிழ்ச்சி) கொண்டு வாழ அருள்வாய் முருகா!" என வேண்டி, அடுத்த இரண்டு அடிகளைப் படிக்கவும்,

"இப்பூவுலகில் உள்ளவர்களும், முனிவர்களும், எட்டுத் திக்கில் (திசையில்) உள்ளவர்களும், இந்திரனும், பிரம்மனும் எதிர்நின்று காணவும்,

"அலர்மேலு மங்கையுடன் திருமாலும் இன்பத்துடன் மகிழ்வாக இருப்பதை மாந்தரிடம் எடுத்துச் சொல்ல சிறுவை

முருகன் வலிமை நிறைந்த அழகு மயிலேறி, எனை நாடி ஆடி வரவேணும். என்னைச் சுற்றி உள்ளவர்களும், சுற்றத்தாரும், நண்பர்களும், இறையன்பர்களும், சான்றோரும், சாதுக்களும், பெருந்தனக்காரர்களும் புகழும்படி நான் வாழவேண்டும்" என வேண்டி அடுத்த நான்கு வரிகளைப் படிக்க வேண்டும்.

"கமலக்கண்களை (தாமரைக்கண்) உடையவனே! தேவர்கள் வளர்த்த தேவசேனையின் மணவாளப் பெருமானே! ஞானம் நிறைந்த அறிவு உடையவனே! அசுரர்களை வென்ற உயர்ந்த புயங்களை உடையவனே! கிரௌஞ்ச கிரியை (ஏழு கிரிகள்) வலிமையான வேலால் பாய்ந்து அழித்த பொன்னொளிக் கதிர் வீசும் வடிவேலனே! என்னுடைய (1) **இடர்கள் (2) கஷ்டங்கள் (3) நஷ்டங்கள் (4) தேக்கங்கள் (5) தடங்கல்கள் (6) வில்லங்கங்கள் (7) விக்கினங்கள்** ஆகிய 7 கிரியைகளை தகர்த்து நல்ல உயர்வான மதியும், நுட்பமான புத்தியும் உடையவனாக என்னை ஆக்கி என் குடும்பத்தை நிறைவாக வாழச்செய்!" என வேண்டி அடுத்த நான்கு அடிகளைப் படிக்க வேண்டும்.

"குளிர்ந்த முத்துமணி மாலை அணிந்த அழகிய மார்பு உடையவனே! செம்பொன்னைப் போல் பளபளப்பான மின்னிடும் அழகு நிறைந்த உருவமுடையவனே! தொன்மை வாய்ந்த குளிர்ந்த நல்ல தமிழின் மீது மிகுந்த காதல் (விருப்பம்) கொண்ட முருகப் பெருமானே! உன் அடியவர் எண்ணிய போதெல்லாம் அவர்தம் சிந்தனையில் (நினைப்பில்) குடியிருக்கும் குளிர்ந்த சிறுவை முருகனே! நான் உன்னை "சிறுவை பாலசுப்ர மணியா" என்று அழைக்கும்போதெல்லாம் என் நினைப்பில் குடி அமர்ந்து, எனைச் சீராக்கிச் சிறப்புறச் செய்ய மயிலின் மேல் ஏறி ஆடி வந்து அருள்புரிக!" என வேண்டி, முதல் திருப்புகழின் கடைசி நான்கு வரிகளைப் படிக்கவும்.

இந்தத் திருப்புகழைப் பொருள் புரிந்து மனமுருக மனதை ஒருநிலைப்படுத்தி, "சிறுவைக் கோனே! பாலசுப்ரமணியப் பெருமானே!" என வேண்டிட, 1. **இம்மையில் வீடு (பெண்ணுக்குத் திருமணம்) 2. தொழில் 3. சிறந்த குடும்பம் 4. செல்வம் 5. மோட்சம்** என ஐந்து பலன்களையும் (ஐந்துவிதமான மகிழ்வை) நமக்கு சிறுவாபுரி முருகன் தந்திடுவார்.

## அர்ச்சனைத் திருப்புகழ்

சீதள வாரிஜ பாதா! நமோநம
நாரத கீத விநோதா நமோநம
சேவல மாமயில் ப்ரீதா! நமோநம மறைதேடுஞ்

சேகரமான ப்ரதாபா! நமோநம
ஆகம சார சொரூப நமோநம
தேவர்கள் சேனைமகீபா! நமோநம கதிதோயப்

பாதக நீவுகுடாரா! நமோநம
மாவசு ரேசர்கடோரா நமோநம
பாரினி லேஜ்ய வீரா! நமோநம மலைமாது

பார்வதி யாள்தரு பாலா! நமோநம
நாவல ஞான மனோலா நமோநம
பால குமார சுவாமி! நமோநம அருள்தாராய்

போதக மாமுகன் நேரான சோதர
நீறணி வேணியர் நேயா! நமோநம
பூமக ளார்மரு கேசா மகோததி இகல்சூரா

போதக மாமறை ஞான! தயாகரா!
தேனவிழ் நீபநறா வாரு மார்பக
பூரணி மாமதி போல் ஆறு மாமுக! முருகேசா

மாதவர் தேவர்களோடேமு ராரியும்
மாமலர் மீதுறை வேதாயு மேபுகழ்
மாநிலம் ஏழினும் மேலான நாயக! வடிவேலா

வானவர் ஊரினும் வீறாகி வீறளகாபுரி வாழ்வினு மேலாக வேதிரு
வாழ்சிறு வாபுரி வாழ்வே! சுராதிபர் பெருமாளே

*"முருகா! குளிர்ந்த தாமரை போன்ற திருவடிகளை உடையவனே! உன்னைப் பணிந்து வணங்குகிறேன், வணங்குகிறேன்! இசையில் சிறந்த நாரத முனிவருடைய கீர்த்தனங்களில் மகிழ்ச்சி கொள்பவனே! உன்னைப் பணிந்து வணங்குகின்றேன், வணங்குகின்றேன்! சேவற் கொடியோனே! மறைகள் தேடும் பிரதாபனே! உயர்ந்த அழகான மயில் மீது விருப்பமுள்ளவனே! உன்னை வணங்குகிறேன், வணங்குகிறேன்! தேவர்களின்*

சேனாதிபதியே! அரசே! உன்னை வணங்குகிறேன், வணங்கு கிறேன்! உயிர்கள் நற்கதி அடையும்பொருட்டு கொடும் பாதகத்தைப் பிளக்கின்ற கோடாரியை கைக்கொண்டவனே! உன்னை வணங்குகிறேன், வணங்குகிறேன்!"

"பெரிய அசுரர் தலைவர்கள் உன்னைக் கண்டு அஞ்சும் படியான வீரம் காட்டும் பராக்கிரமசாலியே! உன்னை வணங்கு கிறேன், வணங்குகிறேன்! இவ்வுலகில் வெற்றி வீரனாக விளங்கு பவனே! உன்னை வணங்குகிறேன், வணங்குகிறேன்! இமவான் மகளான பார்வதி தேவி பெற்ற குமாரனே! உன்னை வணங்குகிறேன், வணங்குகிறேன்! எந்தன் மனததில் என்றும் ஞான உலாக் கொள்பவனே! உன்னை வணங்குகிறேன், வணங்கு கிறேன்! "பிரம்ம சாஸ்தா" கோலத்தில் சிறுவையில் குடிகொண்டு இருக்கும் பாலசுப்ரமணிய ஸ்வாமியே! உன்னை வணங்குகிறேன், வணங்கு கிறேன்! உந்தன் கருணையை, திருவருளை எனக்குத் தந்தருள்வாயாக."

"யானையின் அழகிய பெரிய முகத்தைக் கொண்ட விநாயகப் பெருமானின் இளைய சகோதரனே! திருநீறு அணிந்த சடையர்களான முனிவர்களின் அன்பனே! தாமரையில் மலர்ந்த இலக்குமிதேவியின் மருமகனே! ஈசனே! கடலைப் பகைத்த சூரனே! உபதேசத்துக்கு உகந்த திருமறை - வேதங்களின் தலைவனே! பிரம்மனுக்கு உபதேசம் செய்த கிருபைக்கு இருப்பிட மானவனே! தேன் வழியும் கடம்ப மாலையின் நறுமணம் கமழும் மார்பினை உடையவனே! அழகிய பௌர்ணமி முழு நிலவைப் போல அழகான சிறந்த ஆறு மாமுகங்களை உடையவனே! முருகேசா! உனை வணங்குகிறேன். (கடுமையான தவமிருக்கும் முனிவர்கள், தேவர்கள், திருமால், தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் பிரம்மன் - இவர்கள் புகழும் நாயகனே! முருகனே! பெரிதான ஏழு உலகுக்கும் தலைவனாக விளங்குபவனே! வடிவேலவனே! தேவர்களின் ஊரான இந்திர லோகத்துக்கும் மேலாக குபேரனின் பட்டணமான 'குபேரபுரி' என்ற அளகா புரியினும் மேம்பட்ட செல்வ வளமிக்க சிறுவாபுரியின் வாழ்வே! தேவர்களின் தலைவனே!" என்பது மேற்கண்ட திருப்புகழின் பொருளாகும்.)

இந்த அர்ச்சனைத் திருப்புகழைப் பாடும்போது பொருளை உணர்ந்து "நமோ நம!" என முடியும்போது, மலர்களை சிறுவை

பாலசுப்ரமணியனின் திருவடிகளில் சமர்ப்பிக்க வேண்டும். முதல் பன்னிரண்டு அடிகளில் அர்ச்சனைத் திருப்புகழில் முருகப் பெருமானின் பராக்கிரமம், அழகு, உறவும் கூறப்படுகின்றன. பின் பன்னிரண்டு அடிகளில் சிறுவாபுரியின் செல்வச்சிறப்பு அழகு, பெருமை ஆகியவையும் கூறப்படுகின்றன. இந்த வரிகளைப் பாடும்போது முருகனை உணர்ந்து வேண்டி, அவனருளால் எல்லாச் செல்வங்களையும் பெறப் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

## தீயவை நீக்கும் திருப்புகழ்

வேல்இ ரண்டெனு நீள்விழி மாதர்கள்
காதலின் பொருள் மேவின பாதகர்
வீணில் விண்டுள நாடிய ரூமைகள் விலைகூறி

வேளை யென்பதி லாவசை பேசியர்
வேசி என்பவ ராமிசை மோகிகள்
மீது நெஞ்சழி ஆசையி லேஉழல் சிறியேனும்

மால யன்பர னார்இமை யோர்முனி
வோர் புரந்தரன் ஆகிய ரேதொழு
மாத வம்பெறு தாளினை யேதின மறவாதே

வாழ்த ருஞ்சிவ போகந னூனெறி
யேவி ரும்பி வினாவுட னேதொழ
வாழ்வ ரந்தரு வாய்அடி யேன்இடர் களைவாயே

நீல சுந்தரி கோமளி யாமளி
நாட கம்பயில் நாரணி பூரணி
நீடு பஞ்சமி சூலினி மாலினி உமைகாளி

நேயர் பங்கெழு மாதவி யாள்சிவ
காம சுந்தரி யேதரு பாலக!
நீர்பெரு ருஞ்சடை யாரருள் தேசிக! முருகேசா

ஆலில் நின்றுல கோர்நிலை யேபெற
மாநில ஙகள் எலாநிலை யேதரு
ஆய னந்திரு வூரக மால்திரு மருகோனே

ஆட கம்பயில் கோபுர மாமதில்
ஆல யம்பல வீதியு மேநிறை
வான தென்சிறு வாபுரி மேவிய பெருமாளே

"வேல் போன்ற இரண்டு நீண்ட கண்களை உடைய பெண்கள், ஆசையுடன் பொருளை விருப்பம் கொண்டவர்கள், வீணாகப் பகைமை கொண்டு ஊமை போல் இருப்பவர்கள், அவர்களையே விலை பேசி நேரம், காலம் பார்க்காமல் ஒருவரை ஒருவர் திட்டிக்கொண்டு பழிச்சொற்களை அள்ளி வீசுபவர்கள், பரத்தையர், மோக இச்சையில் பிரியம் கொள்பவர், விலைமாதர் மீது மோகமுற்று அழியும் ஆசையில் சுற்றித் திரிகின்ற சிறுவனாகிய நான்,

நல்ல புத்தி பெற்று திருமால், பிரம்மா, தேவர், முனிவர்கள், இந்திரன் யாவரும் வணங்கும்படியான மகாதவத்தைப் பெற்ற உன் பொற்பாதங்களை, நாளும் மறவாமல், சிவ தத்துவத்தை விளக்கும் நல்ல சிறந்த நூல்களில் கூறியபடி நல்ல உயர்ந்த வாழ்வை விரும்பி ஆராய்ந்து, நல்ல அறிவு பெற்று உன்னைத் தினம் வணங்கி வாழும் வரத்தை அருள்வாய். மேலும் என்னுடைய இடர்களை, கஷ்டங்களை, துயர்களை நீக்கி அருள்வாயாக!

'நீல நிற அழகி! இளமை நிறைந்தவள்! பச்சை நிறத்தை உடையவள்! நாடகம் பயில் இளம் நங்கை! முற்றும் நிறைந்தவள்! அருள்சக்தி! திரிசூலதாரி! மலர்மாலை அணிந்தவள்! உமையவள்! காளி! சிவனார் அன்புக்கு உகந்த சிவகாம சுந்தரி!" எனப் என பலவாறு போற்றப்படும் உலக நாயகி தந்த பாலகனே! கங்கை தங்கும் பெருஞ்சடை சிவபிரான் பெற்ற குரு மூர்த்தியே! முருகேசனே!

"ஆலிலையில் இருந்தபடியே இப்புவியில் உள்ளோர் யாவரும் நிலையான வாழ்வு பெறவும், பெரிய ஏழு உலகங்களும் நிலைபெறவும், உலகைக் காக்கின்ற திருவூரகம் என்னும் தலத்தில் விளங்கும் திருமால் மருகோனே! உயர்ந்த தங்கத்தால் (ஆடகம்) வேயப்பட்ட கோபுரங்களும், பெரிய மதில்களும் உடைய கோவில்களும் பல வீதிகளும் நிறைந்து உள்ள அழகிய தென் சிறுவாபுரியில் வீற்றிருக்கும் முருகப் பெருமானே! என்று மனமுருகி இந்தத் திருப்புகழை ஓதும்போது, இன்றையச் சூழலில் நமக்கு ஏற்பட்டுள்ள இடர்கள், கஷ்டங்கள், தேக்கங்கள், தடங்கல்கள், வில்லங்கங்கள், விக்கினங்கள், நஷ்டங்களை நினைவில் கொண்டு மனமுருகி முருகப் பெருமானைப் பிரார்த்தித்து, அவை நமைவிட்டுத் தொலைய வேண்டுமென்று வேண்டிக் கொண்டு வணங்கவேண்டும்.

# வரம் தரும் திருப்புகழ்

பிறவி யான சடமி றங்கி வழியி லாத துறைசெ றிந்து
பிணிக ளான துயர்உ ழன்று தடுமாறிப்

பெருகு தீயவினையி னொந்து கதிகள்தோறு மலைபொருந்தி
பிடிப டாத ஜனன நம்பி அழியாதே

நறைவி ழாத மலர்மு கந்த அரிய மோன வழிதிறந்த
நளின பாதம் என சிந்தை அகலாதே

நரர்சு ராதி யரும்வ ணங்கும் இனிய சேவைதனை விரும்பி
நல ன்தாத அடியன் என்று பெறவேனோ

பொறிவ ழாத முனிவர் தங்கள் நெறிவழாத பிலனுழன்று
பொருநி சாச ரனைநி னைந்து வினைநாடிப்

பொருவி லாமல் அருள்புரிந்து மயிலின் ஏறி நொடியில் வந்து
புளக சாச ரனைநி னைந்த முருகோனே

சிறுவ ராகி இருவர் அந்த கரிபதாதிகொடுபொருஞ் சொல்
சிலைஇ ராமன் உடனெ திர்ந்து சமராடிச்

செயம தான நகர்அ மர்ந்த அளகை போல வளமி குந்த
சிறுவை மேவி வரமி குந்த பெருமாளே.

"இறப்பு பிறப்பு என்ற நியதிகளுக்கு உட்பட்ட வாழ்க்கையில் தீய வழிகளில் நடந்து நோய் முதலான துக்கங்களில் வேதனைப்பட்டுத் தடுமாறி, பெருகிய தீய வினைகளினால் மனம் நொந்து கஷ்டப்பட்டு, ஒவ்வொரு பிறப்பின்போதும் அடையும் துயரங்களையும், அதன் தன்மைகளையும் கண்டு அறிய முடியாது. பிறப்பினை விரும்பி அழிந்து போகாமல், தேன் நீங்காத மலர் போன்ற முகத்தில் அரிய அழகிய மோன விழியைத் திறந்துகாட்டி, அழகிய நளினமான உன் பாதம் எனது நினைப்பில் என்றும் அகலாமல், மனிதர்களும், இந்திரனும் வணங்குகிற இனிமையான தரிசனத்தை விரும்பி நன்மைபெறும்படியான பாக்கியத்தை அடியேன் என்று பெறுவேனோ?

குகையில் சிறைப்பட்டு ஐம்பொறிகளும் தவறான வழிகளில் போகாதபடி காத்து, நக்கீர முனிவர், மனவேதனை அடைந்து இருந்தபோது ஒப்பில்லாத வகையில் அருள்புரிந்து மயிலின்மீது ஏறிவந்து ஒரு நொடிப்பொழுதில் பெருமைப்படத்தக்க

திருமுருகாற்றுப்படை என்னும் தமிழ்மாலையை மகிழ்வுடன் ஏற்று அணிந்துகொண்ட முருகனே!

"சீதாபிராட்டியை கொடுஞ்சொல்லால் கானகத்துக்கு அனுப்பிய, வில்லேந்திய இராமனை, சிறுவரான இலவ-குசலவர் இருவரும், யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை இவற்றுடன் வந்தபோது, எதிர்த்துப் போரிட்டு வெற்றி கொண்ட குபேரப்பட்டணமான அள்காபுரி போல எல்லா வளங்களும் மிகுந்துள்ள இச்சிருவாபுரியில் வீற்றிருந்து வரங்களை நிரம்ப இருப்பு வைத்துள்ள பெருமானே! முருகோனே! எனக்கு வேண்டிய வரங்களை அருள்வாய்!" என்று வேண்டிக்கொள்ள வேண்டும்.

## ஸ்தல புராணம்

அசுவமேத யாகம் செய்ய விருப்பங்கொண்ட இராமபிரான் யாகப் பசுவாக அனுப்பப்படவேண்டிய குதரையை ஏவிவிட அது வால்மீக முனிவரின் ஆஸ்ரமத்தின் அருகில் வர அதை அங்கு வளர்ந்து வந்த இராமனின் பிள்ளைகளான லவனும் குசனும் கட்டிப் போட்டுவிட்டனர்.

இச்செய்தி அறிந்த ராமன் இலக்குவனை அனுப்ப அவனால் குதிரைச் சிறுவரிடமிருந்து மீட்டுப்போகமுடியாமல் போகவே இராமனே நேரில் வந்து சிறுவர்களை எதிர்கொண்டு போரிட்டு வென்று குதிரையை மீட்டுச் சென்றான் என்பது இராமாயணச் செய்தியாகும்.

இவ்வாறு இராமனிடம் லவனும் குசனும் சண்டை செய்த இடமே இச்சிறுவர்புரி என்பது வரலாறு ஆகும். இந்த வரலாற்று செய்தியை,

**"சிறுவராகி இருவர் கரிபதாதி கொடுஞ்சொல் சிலை இராமன் உடன் எதிர்த்து ஜெயமதானநகர்"** என்ற திருப்புகழில் மூலம் அறிய முடிகிறது.

ஊரின் பெயர்கூட காரணப் பெயராக அமைந்துள்ளது.

சின்ன+அம்பு+பேடு=சின்னம்பேடு

சிறுவர்+அம்பு+எடு=சிறுவரம்பேடு (சின்னம்பெடு)

சிறுவர்+போர்+புரிந்த=சிறுவாபுரி, சிறுவர்புரி

'பேடு' என்பது அம்பு வைக்கும் கூடு என்பதால், 'சின்னம்பேடு' என்ற பெயரே தற்போது நிலைத்து உள்ளது.

இராமாயணக்காலத்தில் கூறப்பட்ட குசலபுரியே இன்றைய சிறுவாபுரியாகும்.

முருகம்மையார் எனும் முருகப் பக்தர் வாழ்ந்த இடம் சிறுவை. நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமும் ஓயாது "முருகா, முருகா!" என எப்போதும் உச்சரித்து வாழ்ந்தார் முருகம்மையார். எப்போதும் முருகனையே நினைத்து இருப்பதைப் பொறுக்காத முருகம்மையின் கணவர், ஒரு நாள் கடிதெனக் கோபம் கொண்டு முருகம்மையின் கையை வெட்டித் துண்டித்தார். உடன், 'முருகா' என்ற பெயரை என்றும் மறவாத மாதவச்செல்வி முருகம்மையார் 'முருகா' எனப் புலம்பி அழுது வேண்டிட உடனே, "சிறுவை முருகன் அம்மையார் முன் தோன்றி காட்சி தந்து துண்டித்த கையை முன்னிருந்தபடி சேர்த்து அருளினார்" என்று சிறுவை நகர் குகன் பதிகத்தில் திருவாமாத்தூர் தவத்திரு முருகதாச சுவாமிகள் கீழ்கண்ட பாடலில் சிறப்பித்துப் பாடி இருக்கிறார்.

**"சேந்தன் குமரன் சிகரி தொறும் ஆடும்**
**திருத்தர்ளன் சிலைவேடன் திருமகள்மணம் வள்ளி**
**காந்தன், கடம்பன், காங்கேயன், கந்தன்**
**கணபதிசோ தரன் என்னக் கழறவுற்ற பலபேர்**
**வாய்ந்திருப்ப, 'முருகா' என்றொரு பெயரை மறவா**
**மாதொருத்தி கையை அவள் கணவன் வெட்டும் கொடிய**
**தீந்தமைக் குடனே முன்னிருந்த படி கைதழைக்கும்**
**திருவிளையாட் டினைச் செய்த சிறுவை நகர் குகனே!"**

இத்துணை சிறப்புகள் வாய்ந்த சிறுவாபுரிக்கு வரும் அடியவர்கள் பலருக்கும் அவர்கள் வேண்டியபடி வீடு, வாகனம், தொழில், திருமணம் எனக் குடும்பம் சிறக்க கலியுகத்தில் உத்தரவு தந்து தானே உத்தரவாதமாகவும் இருந்து வரும் சிறுவைச் சிறுவன் சிங்காரவேலன் சித்து விளையாட்டுக்களை எழுதுவதற்கு இந்த சிறிய புத்தகம் போதாது.

## சிறுவைச் சிறப்பு

1. முருகம்மையார் கை தழைக்கச் செய்தது. 2. தேவர் இருந்து அமுதுண்டது. 3. தேவேந்திரப் பட்டணம் கிடைக்கப்பெற்றது. 4. இந்திரனுக்கு இந்திரபதி கிடைத்தது. 5. இலவன்-குசன் - இராமனின் அசுவத்தைக் கட்டிய இடம். 6. இராமனுடன் போரிட அதிகாரம் பெற்ற இடம். 7. இராமனுடன் இலவன் - குசன் போரிட்டு சிறுவையை வென்று ஜெயநகராக்கியது. 8. அர்ச்சனைத் திருப்புகழ் பாடப்பெற்றது. 9. சிறப்புத் திருப்புகழ்கள் பாடப்பெற்ற தலமானது. 10. ஒரே திருப்புகழ் மூலம் ஐந்து பலன்களைத் தரும் கோவில் என்ற பெருமை. 11. மரகதப் பச்சைக் கல்லில் செய்யப்பட்ட தெய்வத் திருவுருவங்கள் அமைந்தத் திருத்தலம். 12. கலியுகத்தில் பேசும் கடவுளாகத் திகழும் சிறுவாபுரி முருகன் கோவில் அமைந்த பெருமை எனும் பன்னிரண்டு பெருமைகளை உடையது இன்றைய சிறுவாபுரி.

**முருகா! முருகா!**

**சீதள வாரிஜ பாதா! சரணம்! சரணம்!**

முருகா! பிறிதொருமுறை நான் உனைக் கண்டால், நான் என்னை நினையாது உன்னையே நினைக்க அருள் செய்ய வேண்டும்.

## அபிஷேகப் பொருள்களும், அருளும் பலன்களும்

| | |
|---|---|
| தண்ணீர் அபிஷேகம் | : மனச்சாந்தி |
| நல்லெண்ணை | : பக்தி |
| சந்தனாதித் தைலம் | : சுகம் |
| வாசனைத் திரவியம் | : ஆயுள் வலிமை |
| மஞ்சட்பொடி | : ராஜ வசியம் |
| நெய் | : மோட்சம் |
| பஞ்சாமிர்தம் | : தீர்க்காயுள் |
| தேன் | : சங்கீத (இசை) வளமை |
| வாழைப்பழம் | : பயிர் விருத்தி |
| மாம்பழம் | : சகல வசியம் |
| பலாப்பழம் | : உலக வசியம் |

| | |
|---|---|
| திராட்சைப்பழம் | : பயம் நீங்குதல் |
| மாதுளம்பழம் | : பகை நீக்கம் |
| தம்பரத்தம்பழம் | : பூமி லாபம் |
| நாரத்தம்பழம் | : நல்ல புத்தி |
| தேங்காய்த் துருவல் | : அரசுரிமை |
| சர்க்கரை | : பகையை அழித்தல் |
| பால் | : ஆயுள் விருத்தி |
| தயிர் | : சந்தான (மக்கள்) விருத்தி |
| இளநீர் | : நல்ல புத்திரப்பேறு |
| கருப்பஞ்சாறு | : சாஸ்திரத் தேர்ச்சி |
| அரிசிமாப்பொடி | : பிறவிப் பிணி நீக்குதல் |
| பஞ்ச கவ்யம் | : ஆத்மசுத்தி, பாவ நிவர்த்தி |
| எலுமிச்சம்பழம் | : யம பயம் நீக்கும் |
| நெல்லி முள்ளிப்பொடி | : நோய் நீக்கம் |
| அன்னம் | : ஆயுள், ஆரோக்யம், தேசம் அபிவிருத்தி |
| பச்சைக் கற்பூரம் | : பயம் நீங்குதல் |
| விபூதி | : ஞானம் |
| வஸ்திரம் | : ராஜயோகம் |
| புஷ்பம் | : மகிழ்ச்சி |
| சந்தனம் | : செல்வம், சுவர்க்கபோகம் |
| கஸ்தூரி | : வெற்றி உண்டாகுதல் |
| கோரோசனை | : ஜபம் சித்திக்கும் |
| வலம்புரிச் சங்கு | : தீவினை நீங்கும் |
| சொர்ணம் (தங்கம்) | : வைராக்யம் |
| சஹஸ்ரதாரை | : லாபம் |
| கும்பம் (ஸ்நபனம்) | : அஸ்வமேதயாகப்பலன். |



# ROADS LEAD TO SIRUVAPURI




| | | |
|---|---|---|
| G.N.T. | GRAND NORTHERN TRUNK ROAD | |
| G.S.T. | GRAND SOUTHERN TRUNK ROAD | |
| | WIDE ROADS | |

SIRUVAPURI
CHINNAMBEDU


முல்லை
பதிப்பகம்


323/10, கதிரவன்காலனி அண்ணா நகர் மேற்கு, சென்னை–40
போன்: 26163596, 24715968 e mail: mullaipathipagam@yahoo.com